யான சகோதரத்துவத்துக்கும், ஜாதி ஒழிப்புக்கும் அடி கோலியவர்களாவோம.

சென்ற நூற்றுண்டில் மேல நாடுகளில உயர்ந்த குடும் பத்தினர் தாழ்ந்தவர்களுடைய வாழ்க்கையையும சுவைததுப பார்க்க விரும்பி அவர்களுடன போய் வசிபபது வழககம. ஆர்க்டிக் மகா சமுததிரததுக்குப போகிறார்களே, அது போன்ற ஒரு துணிச்சல. அததகைய துணிச்சலதான உண்மையான வாழ்க்கையின அடையாளம சுமமா ஊர சுற்றி வருவதன்று வாழ்க்கை என்பது அந்த மாதிரி எந்தச சோமபேறியும நடகக முடியாது

நாம தோட்டி வேலை செயய ஆரமபிதது அதை வெற்றி கரமாகச் செயது முடிபபோமானுல, அதுதான சத்தியாக்கிரக சரித்திரத்தின அதிகப புகழ வாய்ந்த அத்தியாயமாயிருககும அதில எவவிதக கஷ்டமும கிடையாது குளிபபது கஷ்ட மானுல அதுபோன்ற கஷ்டந்தான. தினந்தோறும பிறா தேயததுக குளிபபாட்டிவிட்டு, இன்று நாமே தேயததுக குளித்தால அதைக கஷ்டம என்று கூறுவோமா? அடிமைத தனத்தை ஒழிபபோம் என்று கூறினல, உடனே நமமைக கஷ்டப்படுத்திக கொளகிறோம என்று கூறலாமா? பிறரை கட்டாயபபடுத்தி அகௌரவமான வேலையைச செயயுமபடி செயயும அடிமைததனததை மேறகொண்டார ஒழிந்துவிட்டாரகள பிறரைத தோட்டி வேலை செயயுமபடி நாம கட்டாயபபடுத்தும வரை நாம அடிமைததனத்தை ஒழிததவர்களாக மாட்டோம. என்றைக்கு நாம வெற்றிகரமாகத தோட்டி வேலையைச் செயகிறோமோ, அன்றைககுததான அந்த வேலை கௌரவமுடையதாக ஆகும. அதன பிறகு அந்த வேலையை யார் செய்தாலும் அது சுதந்திரமாகச செயயும கௌரவமான வேலையாகவே யிருககுமன்றி, கட்டாயத்தின் மேல செயயும ஒரு ஈன ஜாதித் தொழிலாக இராது.

நான் அதிகம் கூறிவிட்டேன். காந்திஜி பெயரைக் கூறுவோா இது விஷயத்தில் ஆட்சேபம கூற உரிமை கிடையாது. அதனால் இவ்வளவு தூரம இதைப பற்றி விவாதிகக வேண்டிய அவசியமில்லை. ஆயினும பிறா என்ன சொலவார்களோ என்று எண்ணியோ அல்லது நாமும சேர்ந்து கொள்வது தான் கௌரவம என்று எண்ணியோ யாரும இந்த வேலையில் இறங்க வேண்டாம என்று கேட்டுக் கொளகிறேன.

# "தீமையை எதிர்க்காதே"



உங்கள் அறிவு, வானத்திலுள்ள நட்சத்திரங்கள் வரை எட்டக் கூடியதாயிருக்க வேண்டும். அப்பொழுதுதான் நீங்கள் உண்மையை அறிய முடியும். நீங்கள் உங்கள் மனத்தைச் சுருக்கிக் கொள்வீர்களானால் நீங்கள் பொய்யிலேயே உழல்வீர்கள்.

நீங்கள் முதலாவதாக பிரபஞ்சம் எத்துணை பெரியது என்பதை உணர்ந்து கொள்ளவேண்டும். ஒவ்வொரு நட்சத்திரமும் சூரியனைப்போல சந்திரன், கிரகங்கள் முதலியன உடைய ஒரு குடும்பமேயாகும். நம்மில் மிக மிக உயர்ந்த அறிவு படைத்தவர்கள் அறிந்திருப்பது கூட அணுமாத்திரமேயாகும். அவர்கள் அறியவேண்டியது அறிந்துள்ளதைவிட ஆயிரக் கணக்கான மடங்கு பெரியதாகும். ஆயினும் நாம் பேசவும், செயலாற்றவும் வேண்டியவர்களாயிருக்கிறோம். நாம் எந்த விஷயத்தையும் மிகுந்த பணிவுடனேயே ஆராய வேண்டும். பிரபஞ்சத்தின் ரகசியங்களில் மிகச் சிலவே மக்கள் அறிந்துள்ளனர். அதிலும் ஒருவன் அறிந்துள்ளது அணுவிலும் அணுவேயாகும். நான் பேச நீங்கள் கேட்க என்றால் அதிலிருந்து உங்கள் அறிவு எத்துணைச் சிறியது என்பது விளங்குமல்லவா! ஆதலால் அறிவு தேடும் விஷயத்தில் நாம் அதிகப் பணிவும்,

அடக்கமும் உடையவர்களாயிருக்க வேண்டும் என்பது புலனாகும்.

நாம் உலகத்தை ஜடப்பொருள் என்றும், சக்தி என்றும் இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஜடப்பொருள் பலவிதமான உருவங்களை ஏற்றுக் கொள்ளுகிறது என்பதை அறிவீர்கள். அதுபோலவே சக்தியும் பலவிதமான உருவங்களை ஏற்றுக் கொள்கிறது. யந்திர சக்தி என்பது ஒரு அம்சம். நாம் ஏதேனும் ஒரு வஸ்துவைத் தூக்கும்போதும், ஏதேனும் ஒரு வஸ்துவை அழுத்தும்போதும், எஞ்சின் ரயில் வண்டியை இழுக்கும்போதும், நாம் சண்டையிடும் போதும், யந்திர சக்தியைக் காண்கிறோம். ஒருவன் ஒரு வீட்டை இடிக்கும் போதும் கட்டும்போதும் இந்த சக்தியைத்தான் உபயோகிக்கிறான். இதுபோலவே [illegible] என்பது சக்தியின் ஓர் உருவமே, ஒலியானது [illegible] எடுத்துக் [illegible] கோபம். [illegible] நிலைமைகளை உண்டாக்குகிறது. சக்தியின் மற்றொரு உருவம் சூடு என்பது. ஒளி என்பதும் அந்தவகைய உருவங்களில் ஒன்று. ஒலியும் மின்சாரம், காந்தம் ஆகியவைகளும் அவை போன்றவைகளே.

நம்முடைய தினசரி வாழ்க்கையில் நம்முடைய குடும்பத்தில் காணும் அன்பும் வாஞ்சையும் அந்த மாதிரி சக்தியின் உருவங்களே. இந்த அன்புதான் மக்களை மக்களோடு பிணைத்து வைக்கின்றது. அதுபோலவே வெறுப்பும் ஒருவித சக்தியே. குதிரை, வண்டியை இந்தப் பக்கமும் இழுக்கும், அந்தப் பக்கமும் இழுக்கும். அதுபோல அன்பு ஒரு பக்கம் இழுக்கிறது, வெறுப்பு ஒரு பக்கம் இழுக்கிறது. அன்பால் பிணைக்கப்பட்டவர்களிடையே கசப்பு ஏற்பட்டால், அன்பால் பிணைக்கப்படாதவர்களைவிட அதிகமாக ஒருவரையொருவர் வெறுக்கிறார்கள். துஷ்டத்தனமுள்ள குதிரை, வண்டியை வேகமாக இழுத்துச் செல்வது போலவே, வண்டியை உதைத்-

துத் தள்ளவும் செய்யும். அந்த மாதிரிச் செய்யாது எருமை நீங்கள் குதிரையை ஓட்டிப் பழக்கப்பட்டிருந்தால் நல்ல வார்த்தைகளால்தான் நல்ல குதிரையாகச் செய்யமுடியும் என்பதை அறிந்திருப்பீர்கள். சில சமயங்களில் பயமுறுத்தி வேகமாக ஓடும்படியாகச் செய்துவிடலாம். ஆனால் அது சிறிது நாட்களுக்குத்தான். குதிரையோ, மாடோ வைத்துப் பழக்க மானவர்களிடம் கேட்டுப் பாருங்கள். அன்பு ஒன்றினால்தான் அவைகளை அடக்கலாம் என்று கூறுவார்கள். பலாத்காரத்தை உபயோகித்தால் பலன் ஏற்படாது. அந்த போலதான் மனைவி, மக்கள் விஷயமும். நம் மனதில் நல்ல எண்ணங்கள் இருந் தால் பிறர் மனதிலும் நல்ல எண்ணங்கள் உற்பத்தியாகும். அது எப்படி என்பதை நாம் அறிந்துகொள்ள முடியாமலிருக்க லாம். ஆயினும் அன்பும், வெறுப்பும் மின்சார சக்தி போலவே வேலை செய்கின்றன.

உலகில் காணப்படும் அரசியல் உள்பட சகல பிரச்னை களும் மக்களை நம் விருப்பம்போல் நடக்கும்படி செய்வதற் கான விஷயமேயன்றி வேறொன்று இல்லை. ஒருவரை நம் விருப்பப்போல நடக்கும்படி செய்வதற்கு நாம் அன்புச் சக்தியை உபயோகிப்பதா அல்லது வெறுப்பையும் பயத்தையும் உபயோகிப்பதா? அதுதான் சத்தியாக்கிரகத்தின் தனிப்பெரும் கேள்வி. ஒரு காலத்தில் ஒரு மனிதன் கண்ணாடித் தடியைப் பட்டுத் துணியால் தேய்த்தால் அந்தக் கண்ணாடித்தடி சிறு காகிதத் துண்டுகளைத் தன்னிடம் இழுத்துக் கொள்கிறது என்பதைக் கண்டான். இப்படிக் கண்ட சக்தி, சிறு சிறு காகிதத் துண்டுகளை மட்டும் இழுக்கக் கூடியதாகத் தோன்றிய போதிலும், அதுவே மலைகளைப் பொடியாக்கவும், ரயில் வண்டி களை இழுக்கவும், நகரங்களுக்கு விளக்கேற்றவும் கூடிய பெரிய சக்தி என்று பின்னர் கண்டார்கள். அதுபோலவே அன்புச் சக்தியையும் பயன்படுத்தலாம். கணவனும் மனைவி யும் சண்டை போட்டால் அந்தச் சக்தி அதை நிறுத்திவிடும்.

மக்களை நம் விருப்பம்போல நடக்கும்படி செய்ய முடியும். இந்தச் சக்தியை அரசியலிலும பயனபடுததலாம். அதுதான் சத்தியாககிரகம எனபது அது ஆரமபததில பலமிலலாதது போல தோன்றும். ஆனால அது மின்சாரம போல அதிக பலம் பொருந்தியதாகும. அதேபோல பலன்கள காட்டக் கூடியதாகும.

முற்காலததில பாடசாலைகளில மாணவர்களிடம கோபச் சோறகளும, பிரமபும உபயோகிததார்கள. அபபடி உபயோ கிககாத பாடசாலை பிரயோசனமிலலை என்றுகூடப பிளளை களின பெறறோாகள எணணினாாகள ஆனால இந்தக் காலததில அனபு, மகிழச்சி, சிரிபபு ஆகிய ஆயுதங்களையே உபயோகிககிறாாகள பிளளைகளை அடிககடிம ஆசிரியரை வேலையை விடடு நீககி வருகிறாாகள. அது போலவே அரசி யலில இந்தக காலததில வேறுபபு முறை கையாளபபட்டு வருகிறது புதுமுறை வரும காலமு முண்டு. கலவித துறையில பழைய ஆசிரியா மறைந்து, புதிய ஆசிரியர் தோனறி யிருபபது போலவே, அனபு முறை தோனறும. பலாதகார முறையைவிட அனபு பலன தருவதுமாகும என் பதை அபபோழுது அறிந்து கோளவோம

உணமையானது வெவவேறு விஷயஙகளுக்கு வெவ் வேறு விதமாக இருககும என்று எண்ண வேணடாம. அது அணுவிலும, சூரியனிலும ஒரே மாதிரிதான. "தீமையை எதிரககாதே" எனபது கிறிஸதவ வேத நூலில உளள ஒரு வாககியம. அதுதான டாலஸடாய் உளபட சகல சததியாக கிரகிகளுககும மூல மநதிரமாகும சததியாககிரகம் என்ப தைப புதிதாக மகாதமாஜி சிருஷடிததாா எனறோ, அலலது டால்ஸடாய் சிருஷடித்தாா எனறோ எண்ண வேண்டாம். கிறிஸதுவும, புததரும கூறியபோழுதுகூட அவர்களால் கண்டு பிடிக்கப்பட்ட புதியதோர் உண்மை என்று கருத

வேண்டார். உலகத்தில் ஆதியில் எழுதப்பட்ட நூல்களிலேயே அது காணப்படுகிறது. உலகத்தில் மிகப் பழைய நூல் வேதம்தான் என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்வார்கள். ஆகவே புத்தர், கிறிஸ்து, டால்ஸ்டாய், காந்தியடிகள் ஆகியோர் மூலம் வந்த இந்த உண்மை மிக மிகப் பழைய தத்துவம். கிறிஸ்துவும், டால்ஸ்டாயும் கூறுவதற்கும் மகாத்மாஜி கூறுவதற்கும் வேற்றுமை உண்டு என்று சிலர் எண்ணுகிறார்கள். மகாத்மாஜி தீமையை எதிர்க்கும்படி கூறுகிறார் அல்லவா? என்று கேட்கிறார்கள். ஆனால் உண்மையில் யாதொரு வேறுபாடும் கிடையாது. "எதிர்த்தல்" என்னும் மொழியின் பொருளை நன்கு அறிந்து கொள்ள வேண்டும். அப்படி அறிந்து கொண்டால் அப்போது வேறுபாடு மறைந்து போகும். "தீமையை எதிர்க்காதே" என்று சொல்லும் பொழுது அதன் பொருள் "தீமை செய்தவனுக்குத் தீமை செய்யாதே, வெறுப்புக் காட்டியவனுக்கு வெறுப்புக் காட்டாதே" என்பதாகும். பொருளை உணர்ந்தால் கிறிஸ்துவின் போதனைக்கும், மகாத்மாஜியின் போதனைக்கும் வேறுபாடு இல்லை என்பதை அறிந்துகொள்ளலாம். தீமை செய்தவர்க்கு நன்மை செய்வது, தீமையை எதிர்ப்பதேயாகும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் தீமையை எதிர்க்காதே என்று சொல்லும்போது, அந்த எதிர்ப்பைக் குறிப்பிடவில்லை. தீமையால் எதிர்க்காமல், தீமையை நன்மையால் எதிர்க்க வேண்டும் என்பதே அதன் பொருள். ஒரு பையனைக் கூப்பிட்டால் என்ன என்று கேளாமல் இருந்தால், அப்பொழுது அவனை அடிக்க வேண்டாம், அவனிடம் அன்பு காட்டுங்கள். அதுபோலவே காந்தியடிகள் தீமை செய்தவர்க்கு நன்மை செய்யுங்கள் என்று சொன்னாலும் நகைப்பார்கள். தீமைக்குப் பதிலாக நன்மை செய்தால் அவருடைய மனம் உடனே மாறிவிடும். அப்படிச் செய்யாமல் தீமைக்குத் தீமையே செய்தோமானால், அவருடைய மனம் இரண்டு மடங்கு

தீமையாகவே ஆகிவிடும். நல்ல எண்ணங்கள், நல்ல மொழிகள், நல்ல செயல்கள் இவற்றிலுள்ள சக்தி அளவற்றதாகும். அதையே நாம் பயன்படுத்த வேண்டும்.

இந்தியாவில் நாம் செய்து வரும் சத்தியாக்கிரச் சோதனையானது, நம்முடைய சுதந்திரத்தைத் தேடுவதற்காக மட்டுமே செய்யும் சோதனை என்று எண்ண வேண்டாம். இந்தியா சுதந்திரம் பெறுவது உலக முன்னேற்றத்துக்கு அவசியமாயிருந்தால், நம்முடைய சத்தியாக்கிரகச் சோதனையைக் கடவுள் ஆசீர்வதிக்கமாட்டார்? அதுதான் அதற்கு உயிரும் முக்கியத்துவமும் அளிப்பதாகும். நம்முடைய துர் அதிர்ஷ்டங்கள் அல்ல, நம்முடைய துன்பங்கள்தான் இந்தப் புதிய போர் முறையை வகுக்கும்படி செய்திருக்கிறது. தீமை எவ்வளவுக்கெவ்வளவு அதிகமோ அவ்வளவுக்கவ்வளவு நமது சோதனையும் பெரிதாகும். அது போலவே நம்முடைய புகழும் அதிகமாக உலகத்தில் பரவும். ஆதலால் நாம் நம்முடைய போரைச் சரியான விதத்தில் நடத்திக் கொண்டு போக வேண்டும்.

பாடசாலையின் தலைமை ஆசிரியர் வெளியே போனதும் வந்த உப ஆசிரியர் பிரம்பை மேஜையிலிருந்து எடுத்து உபயோகித்து மாதக் கணக்காகத் தலைமை ஆசிரியர் செய்த நல்ல காரியத்தை அரை நொடியில் அழித்துவிடுவது போலவே ஆகிவிடும். நாம் அஹிம்சா நெறியினின்று அணுவளவேனும் பிறழ்ந்து நடந்தோமானால், அதற்கு எத்தனையோ சாக்குப் போக்குகளை நாம் கூறலாம். ஆனால் மகாத்மாஜி கூறுவது யாதெனில், நாம் விரைவில் பயன் காணாதிருப்பதற்குக் காரணம் நாம் அப்பழுக்கில்லாமல் அஹிம்சா தர்மத்தை அனுஷ்டிக்கத் தவறுவதே என்பதாகும். ஆங்கிலேயரோ ஐரோப்பியரோ மகாத்மாஜியுடன் பேசிக் கொண்டிருந்து விட்டு விடை பெற்றுக் கொள்ளும்போது, "ஆகா இவரைப்

போலவே இந்தியர் எலலோரும் ஆகிவிடுவார்களாறல் இத்த அரசியல் பிரச்னையை எளிதில தீரதது விடலாம" எனறு எண்ணிக் கோளகிருர்கள சகல ஜனஙகளும அவரைப் போல் நடக்க முடியவிலலை எனபது உண்மைதான ஆயி னும் மக்கள மனததிலிருநது வேறுபபு உணாச்சியை வேருடன கலலி எறிவதே நமது நோககமாக இருகக வேண்டும இநத முயற்சியில ஒவ்வோருவரும இபபோழுதே ஈடுபட வேண்டும.

# மரங்களும் செடிகளும்



நாம் சுவாசிப்பது போலவே மரங்களும் செடிகளும் சுவாசிக்கின்றன. உலகத்தில் மக்களைவிட மரங்களே அதிகமாகக் காணப்படுகின்றன. இந்த உலகத்தில் மரங்களின் ராஜ்ஜியமே எல்லாவற்றிலும் பெரிய ராஜ்ஜியம். ஆதலால் மரங்களையும் செடிகளையும் பார்க்கும்பொழுது நாம் "மெஜாரிட்டி" முன்னால் இருப்பதாக உணர்தல் வேண்டும். ஆகவே மக்களினமானது தாவர இனத்தைப் போல முக்கியமான தன்று என்று தெரியவரும். ஜனநாயகத்தை நிறுவி வாக்கு எடுப்பதாயிருந்தால் மரங்கள்தான் வெற்றிபெறும். இந்தியாவை அரசாள ஜனநாயகத்தை அமைத்தால் தாவரங்களே அரசர்கள் ஆகிவிடும்.

மனிதன் நீரில் மூழ்கினாலும் சரி, அல்லது வாயையும், மூக்கையும் இறுக மூடிவிட்டாலும் சரி இறந்து போவான். அதேபோலதான் மரங்களும் பூமியில் வேர் இறங்கி யிருந்தாலும், அறவே காற்றில்லாமல் தடுத்து விட்டால் பட்டுப் போகும். ஆயினும் ஒரு வேறுபாடு உண்டு. நாம் வெளியே சுவாசிக்கும் காற்றை கெட்ட காற்று என்றும், நாம் உள்ளே சுவாசிக்கும் காற்றை நல்ல காற்று என்றும் கூறுகிறோம். ஆனால் நமக்குக் கெட்ட காற்றாக இருப்பது தாவரங்களுக்கு

நல்ல காற்றுக்கும் நாம் எதை உண்டு உடம்பை வளர்க்கிறோமோ அதை நாம் உடம்பில் எரிக்கவே செய்கிறோம். ஆம், நாம் அனைவரும் நம்முடைய தசையை எரிக்கவே செய்கிறோம். நாம் சுவாசிக்கும் காற்றே நம்முடைய தசையை எரிக்கின்றது. அதனாலுண்டாகும் புகையே நாம் வெளியே விடும் காற்று. அந்தக் கழிவுக் காற்றை மரங்கள் சுவாசித்து, அதிலுள்ள கரியைப் பிரித்து, அதை தம்முடைய உடம்பில் சேகரித்து வைத்துக் கொள்கின்றன. அதையே தான் நாம் மறுபடியும் நம்முடைய உணவாக உபயோகித்துக் கொள்கிறோம். நாம் உண்பதின் ஒரு பகுதியையே சீரணிக்கின்றோம். எஞ்சியதை வெளியே கழித்து விடுகிறோம். அந்தக் கழிவு பூமியில் சேர்கின்றது. பூமி அதை உறிஞ்சிக் கொள்கிறது. அதன்பின் தாவரங்களின் வேர்கள் அதைக் கிரகித்து அதைப் பயன்படுத்தி நமக்கு வாழை, தக்காளி, மா, முதலிய பல நல்ல உணவுகளை அளிக்கின்றன.

தாவரங்களுக்கும் மரங்களுக்குமுள்ள தொடர்பு, தாய்க்கும் குழந்தைக்குமுள்ள தொடர்பு போன்றதாகும். நாம் கெட்ட தென்று எதை எறிந்து விடுகிறோமோ, அதைத் தாவரங்கள் தாயைப் போல நல்ல பொருள்களாகச் செய்து நமக்குத் திருப்பி அளித்து விடுகின்றன. ஆதலால் உலகத்தின் வாழ்வில் தாவரங்கள் எத்தகைய முக்கியமான ஸ்தானத்தை வகிக்கின்றன என்பதை அறிந்து கொள்ளலாம்.

நமக்கு சுவாசிப்பதற்காக வாயும், மூக்கும், சுவாசப் பைகளும் உள. ஆனால் மரங்களுக்கும் அவைகள் உளவோ? அவைகளிடம் அழகான இலைகள் காணப்படுகின்றன. அவை தாம் அவைகளுடைய மூக்கும் சுவாசப் பைகளுமாகும். மரத்தைக் கவனித்துப் பாருங்கள். காற்றையும், ஒளியையும் போதுமான அளவு பெறுவதற்காக, அதன் இலைகள் சகல பக்கங்களிலும் பரந்திருப்பதைக் காணலாம். சூரிய ஒளியைப் பெறுவதற்காகத்தான் மரங்கள் அதிவிரைவாக உயர்ந்து வளர்கின்றன.

மரத்தடியில் ஒரு கொடியை நட்டால், அது மரத்தைச் சுற்றி ஏறி, சூரிய ஒளியைப் பருக முயலுவதைக் காணலாம். காட்டிலோ, தோட்டத்திலோ உள்ள மரங்களில், எந்த மரங்கள் நிழலில் நிற்கின்றனவோ, அந்த மரங்கள் எல்லாம் நன்றாக வளராமல் சூரிய ஒளியைப் பெறுவதற்காக அந்தப் பக்கமும், இந்தப் பக்கமுமாக வளைந்து வளைந்து வளருவதையும் காணலாம். தாவரங்களின் பிரதான உணவு சூரிய ஒளியாகும்.

நம்மைப் போலவே அவைகளும் உயிருள்ளவை. ஆனால் நாம் இறந்தபின் நம்முடைய உடல்கள் பயன்படாது. அவைகளுடைய உடல்களோ இறந்த பின்பும் பயன்படுவன. மனிதனுடைய வாழ்க்கை முறையோடு தாவரங்களின் சுகாதார வாழ்க்கை முறையை ஒப்பிட்டுப் பார்த்தால் அதன் அழகு விளங்கும். மனிதன் அருந்தக் கூடாத, கேட்ட பழக்கங்களையும் நோய்களையும் தேடிக் கொண்டு அசங்கியமான விதத்தில் இறந்து போகிறான். ஆனால் மரங்களோ அலையாமல் நிலைத்து நிற்கின்றன. அவைகள் தவறான உணவை உண்பதில்லை. சுத்தமாக வாழ்கின்றன. அவற்றின் உடல்கள் இறந்த பின்பும் உபயோகமாகின்றன. சில மரங்களின் கட்டை உலோகத்தைப் போலவே பயன் தருவதாயிருக்கிறது. இன்று இந்தியாவில் பெரும் கீர்த்தி பெற்றுள்ள பெரியார்களில் ஒருவர், மனிதனுக்கு இருப்பது போலவே மரங்களுக்கும் நரம்புகள் இருக்கின்றன என்றும், அதனால் அவை மனிதனைப் போலவே நோவை உணர்ந்து கொள்கின்றன என்றும் கண்டு பிடித்திருக்கிறார். மனித உடலில் இரத்தம் ஓடுவது போலவே மரத்தின் உடலிலும் இரத்தம் ஓடுகின்றது. மரத்தை வெட்டினால் ரத்தம் வடிவதைக் காணலாம். எதற்காகவேனும் ஒரு மரத்தின் பாகத்தை வெட்டி எடுக்க வேண்டியேற்பட்டால், அப்படி வெட்டுவதா லுண்டாகும் காயம் எளிதில் ஆறும்படியாக நாம் வெட்ட வேண்டும். தவறாக வெட்டினால் அது அதிகமாகத் துன்பமுறும், அது நமக்குப் புலனாகாமலிருக்கலாம். அதனால் கிளை யொன்றை வெட்ட

வேண்டுமானுல் அறுவை வைத்தியர் வெட்டுவது போல் கவன மாக வெட்டவேண்டும். கூர்மையான கத்தியைக் கொண்டு ஒரே வெட்டாக வெட்டினுல் காயம் விரைவில ஆறிவிடும். அப்படிச் செய்யாமல் கையைக் கொண்டு முறித்தால பெரிய காயமாகி விடும். எளிதில் ஆருது. நம்முடைய உடம்பில் ஏதேனும ஒரு கட்டி ஏற்பட்டால அதை நாம விரலைக் கொண்டு கீறுவதில்லை. கூர்மையான கத்தியைக் கொண்டே வைத்தியா கீறுவாா. அது போலவே நாம மரக்கிளையை வெட்டவோ, அல்லது பழமோ மலரோ பறிக்கவோ விரும்பினுல நாம அதையும கவனமாகவே செய்ய வேண்டும்

மரத்தின கீழிருந்து மேலே சாறு பட்டையின மூலமாகவே ஏறுகின்றது. அதனுல பசுமையான பட்டைதான மரத்தின ஜீவாதாரமான பாகமாகும அதனுல அதை கவனமில்லாமல நினைத்தபடி வெட்டலாகாது. காட்டில மரங்கள வெட்டுகிறவா கள், முதலில அவற்றின வேர்ப் பக்கத்தில மரத்தைச சுற்றி பட்டையைச் சீவிவிடுவார்கள அப்பொழுது இரத்த ஓட்டம நின்றுபோய், மரம சிறிது காலத்தில பட்டுப போகும.

மரங்கள மண முறைகளையும கையாளகின்றன தவிர உலகத்தில இரண்டு விதமான மலாகளைக காணகிறோம. ஒன்று ஆண்மலர், மற்றது பெணமலா பழம உணடாக வேணடு மானுல இரண்டு மலர்களும ஒன்று சேரவேண்டும வசந்த மலர்கள புன்னகை பூப்பதும, மணம கமழுவதும நமக்காக என்று எணணவேண்டாம. அதுதான் அவற்றின் மணச சடங்கு குடும்ப விழா மலாகளிலுள்ள ஆண்தாதும் பெண் தாதும எப்படிச சேருகின்றன என்று தெரியுமா' அது இதைவிட அதிக வியப்பான விஷயமாகும.

மலர்களில் மொய்க்கின்ற அழகான பூச்சிகளும், வண்டு களும், எறும்புகளும தான் பூத்தாதுக்களை ஒரு மலரிலிருந்து மற்றொரு மலருக்குக கொண்டு போய்ச் சேர்க்கின்றன அதன்

காரணமாகவே பழங்களும் விதைகளும் உண்டாகின்றன. இந்தப் பூச்சிகளை எல்லாம் மலர்களின் விரோதிகள் என்று எண்ணலாகாது. அவைகள்தான் செடிகளின் திருமணத்தை முடித்து வைக்கும் புரோகிதர்கள். அப்படித் திருமணத்தை நடத்தி வைப்பதற்காக மலர்கள் தேனை வைத்துக் கொண்டு அந்தப் புரோகிதர்களை அழைக்கின்றன. அவர்கள் தேனைக் குடிப்பதற்காகச் செல்லும் பொழுது ஆண்தாது அவற்றின் உடலில் ஒட்டிக்கொள்கிறது. பிறகு அவை அதைப் பிற மலர்களுக்குக் கொண்டு போய்ச் சேர்க்கின்றன. ஆதலால் தேனைப் புரோகிதர்களுக்குக் கொடுக்கும் தட்சணையாகவோ, அல்லது இந்தக் காலத்தில் பலகலை பட்டம் பெற்ற இளைஞர்கள் வேண்டுமென்று வற்புறுத்திக் கேட்கும் ஸ்ரீதனமாகவோ பாவிக்கலாம். ஆனால் ஒரு வேறுபாடு, நாம் கொடுக்கும் தட்சணையோ அசுத்தமான நாணயங்கள். மலர்கள் கொடுக்கும் தட்சணையோ அமுதம்போன்ற தேனாகும். ஆகவே நாம் இழிவாகக் கருதும் அந்தச் சின்னஞ்சிறிய பூச்சிகள்தான் மரங்களில் பழங்களையும், விதைகளையும் உண்டாகும்படி செய்து நமக்கு உணவளிக்கும் அன்னதாதாக்கள். நாம் உண்ணும் ஒவ்வொரு பருக்கையும் மலர்களில் நடைபெறும் திருமணத்தின் பயனேயாகும்.

ஆதலால் எந்த மரத்தைப் பார்த்தாலும் நாம் அதை நம்முடைய அன்னையாகவே எண்ணவேண்டும். ஏதேனும் மலரைப் பறிக்கவேண்டி யிருந்தால் அறுவை வைத்தியரை நினைவில் வைத்துக்கொண்டு அதைக் கஷ்டம் கொடாமல் கவனமாகப் பறிக்கவேண்டும். மலர்களினின்றும் ஏதேனும் சிறிய பூச்சி ஒன்று வெளியே வந்தானால், அதை நாம் நம்முடைய சிறிய பாட்டியாக எண்ணிக்கொள்ள வேண்டும்.

ஆண் மலர்களும், பெண் மலர்களும் வேறு வேறு மரங்களில் உண்டாகின்றனவா? அல்லது ஒரே மரத்தில் உண்டா

கின்றனவா? என்று கேட்பீர்கள், சொல்லுகிறேன். பெரும்பான்மையான மரங்களில் ஆண் மலர்கள், பெண் மலர்கள் இரண்டும் உண்டு, ஆனால் சில மரங்களில் ஆண் மலர்கள் மட்டுமே பூக்கும். சில மரங்களில் பெண்மலர்கள் மட்டுமே பூக்கும். மரத்தைத் தனி உயிராக எண்ணலாகாது அதை ஒரு குடும்பமாகவோ, அல்லது சமூகமாகவோதான் எண்ண வேண்டும். அதில் பல உயிர்கள் வாழ்கின்றன அவைகள் அனைத்தும் ஒன்றுகச் சேர்ந்து அழகாக வாழ்ந்து வருகின்றன நம்முடைய உடம்பும் அதுபோலவேதான் கையோ, காலோ, மூளை சொன்னபடி கேட்காவிட்டால், உடனே உடம்பில் அந்த பாகங்கள் வேலை செய்ய முடியாமல் ஆகிவிடும் ஆங்கிலேயன் ஒருவனை அடித்துவிட்டால் அவன் நோவடைவதுபோலவே, அந்தச் சமூகம் முழுவதும் நோவடையும் அந்தச் சமூகம் மரத்தைப்போல ஒரே உயிராக வாழ்வதுதான் அதற்குக் காரணம் ஆனால் நமமுடைய இந்திய சமூகத்திலோ ஒருவன் அடிபட்டால் நாம் எல்லோரும் அதை நமக்குப் பட்ட அடியாக உணர்வதில்லை அதனால்தான் நாம் இந்தக் கீழான நிலைமையில் இருந்து கொண்டிருக்கிறோம். இத்தகைய ஒற்றுமையை நாம் மறுபடியும் உண்டாக்க வேண்டும் நம்முடைய குடும்பங்களில் அத்தகைய ஒற்றுமையைக் காண்கிறோம். அந்த ஒற்றுமையைச் சமூகத்திலும் உண்டாகும்படி செய்தால் என்ன? இந்திய சமூகம் முழுவதையும் ஒரே குடும்பமாக எண்ணி அதுபோல வாழ்ந்தால் என்ன? நம்மிடமுள்ள சக்திகளையெல்லாம் சமூகத்துக்காகப் பயன் படுத்தவேண்டும். அதனால் தேசம் க்ஷேமமடையும் அப்பொழுது தாய்க்கும் சகோதரனுக்கும் குடும்ப க்ஷேமத்தைக் கண்டு ஆனந்தம் உண்டாகும் அதுதான் தேசபக்தி என்பதன் பொருளாகும்.

பெட்டைக்கோழி குஞ்சுகளைப் பெறுவது எப்படி? முதலில் முட்டைகளை இடுகின்றது. அதன் மேற்புறத்தில் ஒரு ஓடு, அதற்கடுத்ததாக ஒரு மெல்லிய தோல். அதனுள் இரண்டு

கட்டியான திரவங்கள், ஒரு திரவம் வெண்மையாகவும், மற்றது மஞ்சளாகவும் இருக்கும். அந்த மஞ்சள் பாகம் குஞ்சாக மாறும்போழுது அதற்கு உணவாகப் பயன்படுவது வெள்ளைத் திரவம்.

பக்ஷிகளிடமும் முட்டைகள் உண்டாகின்றன. ஆனால் அவை வெளியே இடப்படுவதில்லை. அன்னையின் வயிற்றி லுள்ளேயே நீண்ட காலம் தங்குகின்றன. முட்டையிலுள்ள மஞ்சள் பாகம் குஞ்சாக மாறி ஓட்டை உடைத்துக் கொண்டு வெளியே வரும்வரைக்கும் அதற்கு வெள்ளைக் கரு எவ்வாறு உணவு கொடுத்துக் கொண்டிருக்கிறதோ, அதுபோல மனிதக் குழந்தை தாயின் வயிற்றில் உண்டாகிக் கொண்டிருக்கும் போது, அதற்கு உணவு எங்கிருந்து கிடைக்கின்றது? அதை ஊட்டுபவர் யார்? குழந்தைக்கு வேண்டிய இரத்தமெல்லாம் குழந்தையின் கொப்பூழ்க்கொடி வழியாகத் தாயின் உடலி லிருந்து செல்கிறது. மலரில் காம்பும் இதழ்களும் உள. மலருக்கும் மலரில் உண்டாகும் பழத்துக்கும் உணவானது காம்பு வழியாக வந்து சேர்கின்றது. காம்புதான் அந்தத் தாவரக் குழந்தை உண்டாகும் காலத்தில் உணவு போகும் வழியாகவுள்ள கொப்பூழ்க்கொடி. ஆகவே தாயை ஒரு மரம் போலவும் குழந்தையைக் காம்பு மூலம் உணவு பெற்று மலரில் வளரும் பழமாகவும் பாவிக்கலாம். பழமானது பறிக் கும் பருவத்தை அடைந்தும், காம்பு உலர்ந்துபோகின்றது. அதுபோலவே குழந்தை தாயின் வயிற்றிலிருந்து வெளிவே வரக்கூடிய பருவத்தை அடைந்ததும் அதன் கொப்பூழ்க்கொடி யும் பிரிந்து விடுகின்றது. இரண்டுக்கும் அதிக வேறுபாடு இல்லை.

தென்னை மரத்தைப் பாருங்கள். தேங்காய்கள் அதன் உச்சியில் காய்க்கின்றன. அவ்வளவு உயரத்திலிருந்து விழுந்தாலும் அவை சேதமடைவதில்லை. ஏன் தெரியுமா?

அதன்மீது பருத்த மூடியிருப்பதுதான் காரணம் தேங்காயைக் கவனித்தால் அதன் கொப்புழ் எது என்று தெரிந்து கொள்ளலாம். மரத்தில் தொங்குவதற்குப் பயன்படும் காம்புதான் அதன் கொப்புழ்க் கொடி குழந்தை பிறந்த பின் தாயினின்றும் பிரிந்து தனி உயிராக வாழ்வதுபோலவே, தேங்காயும் மரத்தினின்றும் விழுந்தபின் தனித்து வாழ முடியும். தேங்காயையும் ஒரு முட்டையாகப் பாவிக்கலாம். அதனுள் அது செடியாக வளர்வதற்கு வேண்டிய உயிர்ச் சத்தும், உணவும் உள் தென்னங்கன்று தேங்காயினுள் வளர்ந்து வரும் வரைக்கும் அதிலுள்ள பருப்பும், நீருமே உணவாகப் பயன்படுகின்றன பருப்பும், நீரும் நமக்காக ஏற்பட்டவை என்று எண்ணலாகாது. கன்று உண்டாகவும், நிலத்தில் வேரூன்றவும் கூடிய உருவமடையும் வரைக்கும் உணவாகப் பயன்படவே அவை தேங்காயினுள் வைக்கப்பட்டிருக்கின்றன இதுதான் தென்னை மரத்திலுண்டாகும் முட்டையின் சரிதையாகும் இது போலவேதான் நெல்லும் அதிலும் உமியினுள்ளேயே அரிசிக் குழந்தை யிருக்கிறது அந்தக் குழந்தைக்கு நிலத்தில் வாழத்தெரியும் வரைக்கும் அதனுள்ளேயே உணவு சேகரித்து வைக்கப்பட்டிருக்கிறது அரிசி எல்லாம் நமக்காகவே சிருஷ்டிக்கப் பட்டிருப்பதாக நாம் எண்ணிக் கொள்கிறோம், அது தவறு அதனுள் வைக்கப்பட்டிருக்கும் உயிர்க்கு உணவாகவே சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன.

# நட்சத்திரமும் அணுவும்



நாம் இரவில் வானத்தில் பார்க்கும் நட்சத்திரங்கள் எல்லாம் நம்முடைய பூமியைப் போன்ற உலகங்களே யாகும். அவைகளில் சில நம்முடைய பூமியைவிடப் பல கோடி மடங்கு பெரியன. வானத்தில் சில இடங்களில் மங்கலாகத் தோன்றும் வெண் மேகங்கள் பல்லாயிரக் கணக்கான உலகங்களின் கூட்டமேயாகும். தூரம், பருமன் ஓட்டம் ஆகியவற்றை ஆராய்ந்தால் அண்டத்தில் காண்பவை எல்லாம் அச்சமும் ஆச்சரியமும் ஒருங்கே தரக்கூடியனவாக இருப்பதை அறியலாம். இத்தகைய ஆராய்ச்சியில் நம்முடைய கற்பனா சக்தியைப் பயன்படுத்துவது நல்லது. அப்படிச் செய்தால் நம்மிடம் செருக்குக் குறைந்து பணிவு உண்டாகும்; அன்புணர்ச்சி தோன்றும். துக்கத்தையும், துன்பத்தையும் சகித்துக் கொள்வதற்கு வேண்டிய பலம் உண்டாகும். துக்கத்தையே இன்பமாக மாற்றக் கூடிய சக்தியும் பிறக்கும்.

நான் பேசுகிறேன். என் வாயில் உண்டாகும் ஒலி உங்கள் காதுக்கு எட்டுகிறது. அது வெகு விரைவாய்ப் பிரயாணம் செய்கிறது. ஆயினும் அது பிரயாணம் செய்யக் காலம் செல்லவே செய்கிறது; சிறிது தூரத்திலுள்ள

ஆற்றிலோ, குளத்திலோ ஒருவர் துணி துவைக்கும் பொழுது பார்த்திருப்பீர்கள் கல்லில் துணி படுவதைக் கண்ட சிறிது நேரம் கழிந்தே அதனால் உண்டான சப்தம் கேட்கும். அந்த நேரம்தான் சப்தம் கல்லிலிருந்து புறப் படுக காதுக்கு வந்து சேருவதற்காக வேண்டியிருந்த நேர மாகும்.

இடியையும் மின்னலையும் கவனித்தீர்களா? மின்னல் வெட்டுகிறது சிறிது நேரம் கழிந்த பிறகே இடி முழக்கம் கேட்கிறது. ஆனால் இரண்டும் ஒரே சமயத்தில் தான் உண்டாகின்றன ஒளி சீக்கிரம் வந்து விடுகிறது, ஒலி வரத் தாமதமாகிறது வெகு விரைவாகச் செல்லும் ரயில் வண்டி நிமிஷத்துக்கு ஒரு மைல் வீதம் ஓடும். ஆனால் ஓசையோ அதைவிடப் பன்னிரண்டு மடங்கு அதிக வேக மாய் ஓடும் அதாவது ஓசையின் வேகம் நிமிஷத்துக்கு 12 மைல் இதிலிருந்து சப்தம் எவ்வளவு வேகமாகச் செல் லுகிறது என்பதைத் தெரிந்து கொள்ளலாம்

மின்னலும் உண்டானவுடனே நடந்தது தெரிந்து விடுவதாக எண்ணவேண்டாம் அதன் ஒளி பிரயாணம் செய்யவும் நேரம் தேவைப்படவே செய்கிறது ஆனால் அது பிரயாணம் செய்யும் நேரம் அதிக அற்பமாக இருக்கிறபடி யால் நாம் அதைப் பொருட்படுத்துவதில்லை. அவ்வளவு வேகமாய்ச் செல்லுகிறது அது. அதாவது ஓசையை விட ஒளி 10 லட்சம் மடங்கு அதிக வேகமான ஓட்டம் உடை யதாயிருக்கிறது

நட்சத்திரங்களுக்கிடையிலுள்ள தூரத்தை நாம் மைல் கணக்கில் அளந்து கூறமுடியாது பெரிய பணக்கா ரர்களுடைய சொத்தைக் கணக்கிடும்பொழுது நாம் இத் தனை பைசாவென்றோ, அல்லது இத்தனை ரூபாய் என்றோ கூறுவதில்லை. இத்தனை கோடி என்றே கூறுவார்கள்.

அதுபோல் நட்சத்திரங்களுக்கிடையில் உள்ள தூரத்தை இத்தனை மைல்கள் என்று கூறாமல், இந்தத் தூரத்தைக் கடக்கச் செல்வதற்கு ஆண்டுகள் இத்தனை என்றே கூறுவது வழக்கம்.

அதைச் சற்று யோசித்துப் பாருங்கள். இந்தியாவின் வடக்கேயிருந்து தெற்கேவரை எவ்வளவு தூரம், அதைப் போல நூறுமடங்குத் தூரத்தைக் கடக்க ஒளிக்கு ஒரே செக்கண்டுதான் தேவை. அது ஓசையைவிட 10 லட்சம் மடங்கு அதிக வேகமாய்ச் செல்கிறது என்றும், ஓசை, வேகமான ரயிலைவிட 12 மடங்கு அதிக வேகமாய்ச் செல்கிறது என்றும் கூறினேன் அல்லவா? பூமிக்கும் சூரியனுக்குமிடையில் வெகு தூரம் என்பதை அறிவீர்கள். பூமி சூரியனைச் சுற்றி வரும் பாதையும் வெகு தூரம் என்பதை அறிவீர்கள். அந்தப் பாதை பூமிக்குள்ள தூரத்தைவிட 6-மடங்கு நீண்டதாகும்; அதாவது 5400-லட்சம் மைல்கள். இவ்வளவு தூரத்தைக் கடக்கப் பூமிக்கு ஒரு வருஷம் தேவைப்படுகிறது. ஆனால் ஒளியோ, பூமி 38-வருஷகாலம் சுற்றிவரும் தூரத்தை ஒரே நாளில் கடந்துவிடும். அவ்வளவு வேகமாய்ச் செல்லும் ஒளிக்குக்கூட நமக்கு வெகு சமீபத்திலுள்ள நட்சத்திரத்திலிருந்து நம்முடைய பூமிக்கு வந்து சேர 3-வருஷங்கள் ஆகின்றன. இதிலிருந்து அந்த நட்சத்திரம் எவ்வளவு அதிக தூரத்திலிருக்கிறது என்பது தெரிகின்றதல்லவா? பக்கத்திலுள்ள நட்சத்திரமேதான் அவ்வளவு தூரம். அப்பாலுக்கு அப்பாலுள்ள நட்சத்திரங்களிலிருந்து ஒளியானது நமக்கு வந்துசேர ஆயிரம் ஆண்டுகள்கூட ஆகும்.

ஆதலால் இன்று புதிதாக ஒரு நட்சத்திரத்தைப் பார்த்தால் நாம் பார்ப்பது அதன் இயற்கைத் தோற்றமன்று. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் புத்தர் பிறப்பதற்கு முன்

புள்ள தோற்றமாகும். அன்று புறப்பட்ட ஒளி இன்றுதான் நம்முடைய கணகளுக்கு வநது சேர்நதிருக்கிறது. அதற்கிடையில ஏததனையோ காரியஙகள் இந்தியா தேசநதில நடந்து விட்டன. ஆகவே அது வெகு விரைவாகச் செலலும் ரயில வண்டியைவிட 120 லட்சம மடஙகு அதிக வேகமாக ஓடிவந்து, இபபொழுதுதான் நம்மிடம வநது எட்டியிருக்கிறது. அதைச சிறிது யோசிததுப பாருஙகள

ஆகவே நாம வசிககும இநத உலகமும, அதில வாழும் நம்முடைய சிறறுயிரகளும எததனை அற்பமானவை? எலியைப் பிடிககப போறி வைககிறோம அதனுள பல எலிகள சோந்து அகப்பட்டுக கொளகினறன அஙகுள்ள வெஙகாயததைத தினனவும விளையாடவும செயகினறன அவறறுள சில மகிழகினறன, சில வருநதுகினறன. இதுபோலதான நாமும நமமுடைய பூமியும.

இவவாறு புறநதேயுளள அண்டமானது இநதுணைப் பெரியதாக இருபபது போலவே, அகநதேயுளள பிணடமும அத்துணைப பெரியதாகவே காணபபடுகிறது அதுபோலவே ஒவவொரு அணுவும ஒரு அணடமாகவே இருநது வருகிறது. அதனுள மூலககூறுகளும, அணுககளும ஏலகடிரான்களும ஒளியைபபோல வேகமாகவும நடசததிரஙகளை போலவும, கிரகஙகளைப போலவும அதிக ஒழுஙகாகவும ஒறறைச சுற்றி ஒனறு சுழனறு வருகினறன புறநதே வானததில சுழலும நட்சததிரஙகள எவவளவு அதிக வேகமுடையனவாய இருககின்றனவோ அதுபோலவே அகததே அணுவிலுளள சக்தி வேகமுடையனவாய இருக்கின்றன. இப்படி உள்ளும் புறமும் அதி அற்புதமாக நிகழ்ந்து வரும இநத அண்ட சராசரங்களெல்லாம் ஒரு தனிப் பெரும் சக்தியின் தோற்றங்களேயாகும். அதைத்தான் நமது முன்னோர்கள தமது காயத்திரி மந்திரத்தில் கீழகண்டவாறு போற்றி வணங்கினார்கள்.

"அளவிட்டு அறிய முடியாத இந்த உலகங்களை எல்லாம் இடை விடாமல் ஆக்கியும் அசைத்தும், அழித்தும் வருகின்ற அந்தப் பரஞ்சோதியை நான் வணங்குகிறேன். அது என் அகத்தே நிறைந்து என்னை தூய்மையாக்குமாக"

நீங்கள் என்னைச் சுற்றி இந்த பூமியில் பத்திரமாக உட்கார்ந்திருப்பதாக எண்ணுகிறீர்கள் ஆனால் நம் கற்பனைக்கு எட்டாததும் தலை சுற்றும்படியானதுமான அதிக வேகத்தோடு நாம் சென்று கொண்டிருக்கிறோம் என்பதை நீங்கள் உணரவேண்டும். காலால் நடப்பதைவிட எத்தனை மடங்கு அதிக வேகமாக ரயில்வண்டி ஓடுமோ அத்தனை மடங்கு வேகமாக ரயில்வண்டியைவிட பூமி சுழலகின்றது. அது நம் எல்லோரையும் தாங்கிக் கொண்டு அத்தகைய வேகத்தில் தன்னைத் தானே சுழல்வது மட்டுமன்றி சூரியனைச் சுற்றி யும் ஓடிக்கொண்டிருக்கிறது சூரியனைச் சுற்றும் பொழுது அதன் வேகம் வேகமான ரயில்வண்டியைவிட அறுநூறு மடங்கு அதிகமாகும் இவ்வாறு பூமியானது இரண்டு விதமாக தலை தெரிக்க ஓடிக்கொண்டிருக்கும் சமயத்தில் நாம் பேசவும், விளையாடவும், போர் செய்யவும், கனவு காணவும், பிரார்த்தனை செய்யவும் செய்து கொண்டிருக்கிறோம் இதைவிட விநோதமான விஷயம் வேறு ஏதேனும் உண்டா? எல்லாவற்றிலும் விநோதமான காரியம் எது வென்றால், நாமோ இப்படி அபாயகரமான வேகத்தோடு ஓடிக்கொண்டிருக்கிறோம் அதேசமயத்தில் பிறர்க்குத் துன்பம் விளைவித்தால் நமக்கு இன்பம் விளையும் என்று எண்ணுகிறோமே அதுதான்.

# இந்திய தேச சரித்திரம்

## சில முக்கிய சம்பவங்கள்

இந்தியாவில் பிரிட்டிஷாரும் முஸலமான்களும் ஆட்சி செய்த காலத்தையே நாம பெரிதாக எண்ணுகிறோமேயன்றி, அவர்கள் ஆட்சிக்கு முன, நீண்ட நாள ஆண்ட ஆட்சிகளைப பற்றிச் சிந்திப்பதிலலை. இராமாயணத்தையும மகாபாரதத்தை யும படித்தால அந்த நூலகள எழுந்த காலத்திலும், அதற்கு முன்னரும நம்முடைய ஜனங்கள ஒழுங்காக ஆட்சி, கலைகள வளர்ச்சி, வியாபாரப் பெருக்கம, கைத தொழில அபிவிருத்தி, கலவி மிகுதி முதலிய அமசங்களுடன எததுணை உயர்ந்த நாகரிகம உடையவர்களாக இருந்தார்கள என்பது தெரியவரும். அந்தக காலத்து நாகரீகத்தைவிட நாம அதிகமாய் பெற்று விட்டோமா என்பது கூடச சந்தேகந்தான. அவர்கள அப்படி உயர்ந்த நாகரீகம உடையவர்களா யிருந்தது, மூவாயிரம ஆண்டு களுக்கு முன்னர்.

பிரிட்டிஷார் ஆட்சி நிலைநாட்டப பெற்றது ஹேஸ்டிங்ஸ் பிரபு காலத்திலேயே அதுமுதல இதுவரை பிரிட்டிஷ ஆட்சி நடப்பதெல்லாம நூறு ஆண்டுகளாகத்தான. ஆகவே நம்மு டைய மொத்த சரித்திர காலத்துடன பிரிட்டிஷ ஆட்சி காலத்தை ஒப்பிட்டால, ஒருமணி நேரத்துக்கும, ஒரு நிமிஷ நேரத்துக்கு முள்ள வித்தியாசமே என்பது புலனாகும. ஆகவே நம்முடைய நாகரீக ஒரு மணியில் ஆங்கில ஆட்சி ஒரு நிமிஷமே.

கௌதம புத்தர் காலம் இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டு களுக்கு முன் என்று சரித்திர ஆசிரியர்கள் கூறுகிறார்கள். அவருடைய வளர்ப்பு, சூழ்நிலை, அவருடைய துறவு, போதனை முதலிய விஷயங்களையும் அவருக்குப் பின் வந்த அரசர்களுடைய செயல்களையும் கவனித்தால் அந்தக் காலத்திலும் அதற்கு முன்னாலும் இந்த நாட்டில் எத்தகைய அரசாங்கம் நடைபெற்றது என்று தெரிந்து கொள்ளலாம். நாகரிகம், கலைகள், அரசாங்கம் முதலியவைகள் எல்லாம் எந்த நாட்டிலும் ஒரே நாளில் நிலைத்து விடமாட்டாது. மக்கள் பல்லாண்டுகளாக உழைத்தே அவை களை உண்டாக்கி, வளர்த்து, உயர்ந்த நிலையை உடையதாக ஆக்கியிருப்பார்கள். ஆகவே, புத்தரையும் அவருடைய ஹிதோபதேசத்தையும் உண்டாக்க நம்முடைய நாடு எத்தனை ஆண்டுகள் உழைத்திருக்க வேண்டும் என்று எண்ணிப் பாருங்கள்.

இரண்டாயிரத்து முன்னூறு ஆண்டுகளுக்கு முன் அசோக மன்னருடைய பாட்டனார் இந்தியா மீது படையெடுத்து வந்த கிரேக்கர்களைத் துரத்தியடித்து விட்டுத் தம்முடைய ராஜதானியில் நகரசபை ஏற்படுத்தினார். அக்காலத்தில், நம் நாட்டுக்கு வந்தி ருந்த மெகாஸ்தனீஸ் என்னும் கிரேக்க அறிஞர், அந்த நகரசபை நிர்வாகத்தின் சிறப்பைக் குறித்து அதிகமாய்ப் புகழ்ந்துள்ளார். அவருடைய நூலைப் படிப்பது, இக்காலத்து நகரசபை அறிக்கை யொன்றைப் படிப்பது போன்றதா யிருக்கிறது.

அசோகர் இரண்டாயிரத்து நூறு ஆண்டுகளுக்கு முன் ஆட்சி செய்தார். அவருக்கு ஒப்பான மன்னர் இதுவரை உலகில் பிறக்கவில்லை என்று எல்லா அறிஞர்களும் ஒப்புக் கொள்கிறார்கள். உயர்ந்த நாகரீகமும், கொள்கையும் உடைய மக்களிடையேதான் அத்தகைய சிறந்த அரசர் பிறக்க முடியும். "பிற மதங்களைப் பற்றி இழிவாகப் பேசலாகாது" என்று அசோ கர் கூறினார். இந்த ஒரு வாக்கியம் போதும், அந்தக் காலத்து நாகரீகத்தின் உயர்வை அறிந்து கொள்வதற்கு

வால்மீகி ராமாயண காலத்துக்கும், முஸல்மான்கள் வந்த காலத்துக்கும் இடையில் நாலாயிரம் ஆண்டுகள் கழிந்தன. இந்த நீண்ட காலத்தில நாகரீகமே காணப்பட்டது. அப்படி உயர்ந்த நாகரிகம் இருந்திருக்குமானல் அது ஒழுங்கான ஆட்சி நடைபெற்றுலதான சாத்தியமாகும ஆதலால இடையிடையே சண்டை சச்சரவுகள் நடைபெற்றிருந்த போதிலும், சமாதானமே அதிகமாக நிலவியிருக்க வேண்டும அப்படியானலதானே கலவியும, கலையும், தத்துவமும, தர்மமும செழித்து வளர முடியும்? இப்படி முஸல்மானகளுக்கு முன நடைபெற்ற ஹிந்து சுயராஜ்ய ஆட்சிக காலம, பிரிட்டிஷ் ஆட்சி காலத்தைப போல, நாற்பது மடங்கு கொண்டதாகும பாட்டி கமபை ஊனறிக கொண்டு தளளாடி நடப்பதறகும, இடையில நிறகாமல ஓடும எகஸபிரஸ ரயில வண்டிக்கும எத்தனை வேறுபாடு? நாற்பது மடங்கு எனபதன பொருளை எளிதில அறிந்து கொளளலாம

ஆகவே, நாம பிரிட்டிஷ் ஆட்சியில அடிமைகளாகி அதிக காலம ஆகிவிடவில்லை அதிக காலம இருந்து விட்டது போல வும அதனால சுதந்திரத்தையே மறந்து விட்டது போலவும, சிலர் நடந்து கொளகிறார்கள ஆனால விஷயத்தை நனகு கவனித்தால அப்படி எண்ணுவது எவவளவு அசமபாவிதம் என்பது எளிதில விளங்கும.

ஒரு காலத்தில பிரிட்டிஷார் ரோமர்களுக்கு அடிமைகளாக இருந்தார்கள. எத்தனைக் காலம அப்படியிருந்தார்கள என்று எண்ணுகிறீர்கள? நானூறு ஆண்டுகள, பிரிட்டிஷ் ஆட்சிக்கு வேரூன்றிய கிளைவ காலத்திலிருந்து இதுவரையுள்ள காலத்தை இரட்டிப்பாக்குங்கள, அவ்வளவு காலம முஸல்மானகள் மூன்று மடங்கு காலம் அரசாண்டார்கள. இந்த விஷயத்தை மனத்தில ஊன்றுவது நல்லது.

முஸன்மான்கள ஆட்சிக் காலததை இரண்டு பகுதிகளாகப பிரிக்கலாம். ஒனறு பாபருக்கு முநதியது; மற்றது முகலாய ஆட்சி நடைபெறறது. பாபருக்கு முன அரசாணட முஸ்லீம் சகரவர்ததிகள, முனனூறு வருஷ காலம ஆட்சி செய்தார்கள. முகலாயா 180 வருஷ காலம் ஆணடாாகள அதாவது ஆங்கிலேயர் இநதியாவில் காலெடுதது வைததது முதல இதுவரையுளள காலமதான்.

இபபடியிருநதும் ஏன் பிரிட்டிஷ ஆட்சிக்காலம் அதிக நீளமானதாகத தோனறுகிறது? நாம மரஙகளிடையே நினறு கொணடு, கோபுரததைப பாாததால மரஙகளே கோபுரததைவிட உயரமானவை போலத தோனறும மரஙகள கோபுரததை மறைதது விடவும செயயும. அதுபோல நாம பிரிட்டிஷ ஆட்சியிலே வசிததாலதான் அதிக நாள நடை பெறுவதாகத தோன்றுகிறது. கோகலே காலதது மககள ஆஙகில ஆட்சியே சாஸவதம எனறு எண்ணினாகள அதுபோலவேதான ஔரங்கஜீப காலதது மககள முகலாய ஆடசியேதான சாஸவதம் எனறு எணணியிருபபாாகள

மகாராஷடிராகள பாஜீராவ காலததிலிருநது நூறு வருஷ காலம இநதியாவில அரசாணடாாகள அதாவது ஹேஸடிஙஸ் காலததிலிருந்து இதுவரை எவவளவு காலமோ, அவ்வளவு காலம மகாராஷடிராகள வெறும கொளளைக் கூடடததார் என்று பாடசாலையில நமககுக கற்பிததாாகளே, அது பொய். அவாகள அபபடிப்பபட்டவாகள அலலா நில அளவு முறை, நில வரி முறை போனற விஷயஙகள உளபட சகல அரசியல விவகாரஙகளும அறிநது, ஆடசி செயத மனனாகளே யாவா.

உலகமறிநத பெரிய ஹிந்து மனனாகளான, சந்திர குப்தரையும், விக்கிரமாதித்தரையும பாருஙகள. சந்திர குப்தர் ஆணடபின் 800 வருஷங்கள கழிததே விககிரமாதித்தர் அர

சாண்டார். விக்கிரமாதித்தனுக்குப் பின், 800 வருஷங்கள் ஹிந்து மன்னர் பலர் ஆட்சி செய்த பின்னரே, முகம்மது கோரி என்பவன் இந்தியா மீது படையெடுத்து வந்து தில்லி நகரத்தைக் கைப்பற்றினன்

இந்திய நாகரீகத்தைக் கவனித்தால் ஆதிகாலத்திலிருந்தே நமது ஜனங்கள் பிற மதங்களை இழிவாகக் கருதாமலும், பிற மதங்களைத் துன்புறுத்தாமலும் நடந்து வந்திருப்பது தெரிய வரும். ஆனால் பிரிட்டிஷ் தேசத்தில் பிற மதஸ்தரை துன்புறுத்துவது 19-வது நூற்றாண்டு வரை நடந்து வந்தது 16-வது நூற்றாண்டில் ஆட்சி செய்த அக்பர் சக்ரவர்த்தி, சகல மக்களுக்கும் சம உரிமையும், சகல மதங்களுக்கும் சம அந்தஸ்தும் அளிப்பதாகப் பிரகடனம் செய்தார் அக்பர் சகல மதங்களிலும் உண்மை யிருப்பதாகக் கண்டார் என்றும், அவர் கடவுளை முஸ்லிமான் போல வணங்கியது போலவே, சில சமயங்களில் ஹிந்து போலவும், சில சமயங்களில் பார்ஸிகள் போலவும், சில சமயங்களில் கிறிஸ்தவர்கள் போலவும், வணங்கினர் என்றும் சரித்திராசிரியர்கள் கூறுகிறார்கள் அவர் ஹிந்து மதத்தையும், இஸ்லாம் மதத்தையும் ஏக மதமாகச் செய்ய முயன்றார் ஆயினும் அதை ஏற்றுக் கொள்ளும்படி யாரையும் நிர்ப்பந்திக்கவில்லை அவர் மதங்களின் விஷயத்தில் அனுஷ்டித்த அரசாங்க விதிகள் எல்லாம் இங்கிலாந்திலும் ஐரோப்பாவிலும் முன்னூறு வருஷங்களுக்குப் பின்னரே கையாளப்பட்டது எல்லோரும் தத்தம் விருப்பம் போல கடவுளை வணங்கலாம் என்று அக்பர் சட்டம் செய்தார் அந்தச் சட்டம் ஐரோப்பாவில் அந்தக் காலத்திலும் கிடையாது. அதற்குப் பின்னர் வெகு காலம் வரைக்கும் கிடையாது ஆகவே, மத சுதந்திரம் என்பது நமமுடைய நாட்டுக்குப் புதிய தோர் விஷயமன்று ஆதிகாலம் தொட்டு அனுஷ்டிக்கப் பெற்று வந்த விஷயமேயாகும் அக்பர் பல மதங்களைச் சேர்ந்த போதகர்களுடைய பிரசங்கங்களைத் தமது கொலு மண்டபத்தில் கேட்டுக் கொண்டிருந்த அதே சமயத்தில், இங்கிலாந்து மன்னர்கள், மத வித்தியாசம் காரணமாகப் பாதிரிமார்களை நெருப்பிலிட்டுக் கொளுத்திக் கொண்டிருந்தார்கள்.